உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

இஃது

ஸ்ரீகாஞ்சிச்சித்தாந்த சிவநேசத்திருக்கூட்ட[illegible]ரும்

சைவப்பிரசாரணருமாகிய

வித்வான் பா. சி. முருகேசமுதலியா[illegible]றிய

இராமலிங்கபிள்ளைபாடல் ஆபாச[illegible]ம்

அல்லது

# மருட்பாமறுப்பு விஜயகோ[illegible]ம்,

ஸ்ரீபரமாசாரியசுவாமிகள் கட்டளைப்படி,

அருட்பாவெற்றிக் கையுறையாய்ந்த

திருமுறைமகோற்சவ மகாவிபவமும்

ஸ்ரீகாஞ்சிச் சித்தாந்த சிவநேசத்திருக்கூட்டத்தின் காரியதரிசியாகிய

பா. செ. முருகேசமுதலியார் அவர்களியற்றிய

காஞ்சித்திருமுறை மகோற்சவ நாமாவளியும்

இணைக்கப்பெற்று



இஃது

ஸ்ரீகாஞ்சிபுரத்திலே மகாவிபவமாக நிகழ்ந்த

பன்னிருதிருமுறைத்

## திருவருட்பா விஜய சிந்தாபோசன

மகோற்சவ தினத்தில்

செய்யூர்

ஸ்ரீசித்தாந்த சிவநேசத் திருக்கூட்டத்தாரால்

ஸ்ரீகாஞ்சிபுரம் அச்சியந்திரசாலையில், பதிப்பித்து விநியோகித்தது.

குரோதி வரு தைமீ 10உ. (22-1-1905)

முதற்பதிப்பு பிரதிகள் 500.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீஞானசம்பந்தகுருப்யோநம:

# இராமலிங்கபிள்ளைபாடல் ஆபாசதர்ப்பணம்

## அல்லது

## மருட்பா மறுப்பு விஜய மகாசபம்.

கருங்குழியென்றபெயரைச் சிதம்பரமென்று ஊர்ப்புரட்டுச் செய்தும், உருத்திரர், விஷ்ணு, பிரமன் முதலாயினோரை மலப் புழுக்களென்று நிந்தித்தும், தகராகாசமாகிய சிதம்பரத்தைத் தூஷித்தும், வடலூர்ச்சகோட்டையே உத்தரஞானசிதம்பரமென்றுகூறியும், தமக்குத்திருவருட்பிரகாசவள்ளலென்று சிவபெருமானுக்குரிய நாமத்தை வைத்தும், தம்பாடல்களுக்குத் தேவாராதி திருமுறைகளுக்குரிய திருவருட்பா என்னும்பெயரை வைத்தும், வேதசிவாகமங்களைப் பயனிலவென்று பழித்தும், செத்தவர்களை யெழுப்புவேமென்று கூக்குரலிட்டும் செத்துப்போன, கருங்குழி இராமலிங்கபிள்ளையினிடத்தில் அபிமானமுள்ள போலிச்சைவர்கள் சிலர் அவரைக்கடவுளென்றும், அவர் பாடல்களை அருட்பாஎன்றும் சென்னையில் ஆர்வாரம்பண்ணினார்கள். அத்துவித சித்தாந்த மஹோத்தாரணரும், ஆரணிநகர சபஸ்தானவித்துவானும், மாயாவாததும்சகோளரி என்று சென்னை அராசாங்கத்தாராலும் உறுதிப்படுத்தப்பெற்றவரும், மதுரைத்தமிழ்ச்சங்கப் புலவருமாகிய யாழ்ப்பாணத்து மகாவித்வான் ஸ்ரீமாந் நா. கதிரைவேற்பிள்ளை அவர்களை விவாதிக்கவருமாறு அறைகூவினார். அவர் சென்னை, காஞ்சி, சிதம்பரம், தேவகோட்டை, திருமுருகன்பூண்டி முதலிய பல்பல இடங்களிலுள்ள சபைகடோறும் இராமலிங்கபிள்ளை அருள்பெற்றவரல்லரென்றும், அவருக்குத் திருவருட்பிரகாசவள்ளலார் என்றல் தகாதென்றும், அவர் [illegible] [illegible]ணக்களும் பொய்களும் நிறைந்த [illegible]

திருவருட்பா திருமுறை என்னும்பெயர்கள் ஒருசிறிதும் பொருந்தாதென்றும் பற்பல நியாயங்களைக்காட்டி விவாதித்து, சைவத்திருக்கூட்டத்தினர் யாவர்க்கும் ஆனந்தமுண்டாகுமாறு முன்னோர் கொள்கையை நிலைநாட்டினார். அச்சபைகளோடும் எதிர்நின்றுவாதிக்கஅஞ்சியொளித்த போலிச்சைவர்களெல்லாம் கூடகூர்மம் போலப் புரளிகளையும் நிந்தைகளையுமகட்டித் தாம்கெடுவதோடு தம்மையடுத்தாரையும் கெடுக்குமாறு சைவசித்தாந்தத்திற்கு மிக்க விரோதமான மருட்பாவைப் படிக்கத் தூண்டித் தேவாரமுதலிய திருமுறைகள் அருட்பா ஆகாதென்றும் கருங்குழியார்பாடல்களே அருட்பா ஆகுமென்றும் அஞ்சாஞ்சமயகுரவர் தங்கணைக்கர் என்றும் தம்விடாப்பிடியைச் சாதித்தற்கும் யாராவாத துய்ச்சோசரி அவர்கள்மீதுவைத்த பொருமையை நாட்டற்குமாகப் பலவாறுகூறுவாராயினர். எங்கேபார்த்தாலும் அருட்பா மருட்பா என்றசொற்களே தொனியாநின்றன.

ஸ்ரீமந் நா. கதிரைவேற்பிள்ளை அவர்கள் பற்பல உபந்நியாசங்களாற் கருங்குழியார்பாடல்களைக்கண்டித்துவென்றார். அன்னவரின் உபந்நியாசசாரங்கள் வெளிவருமாயின் மருட்பாவினை அருட்பாஎன்றும், மருட்பிரகாச இராமலிங்கபிள்ளையை அருட்பிரகாசவள்ளலார்என்றும் மருண்டபோலிச்சைவர்கள் தெருண்டுண்மைகண்டு உய்வரென்னும் உபகாரசிந்தைகொண்டே "இராமலிங்கபிள்ளைபாடல் ஆபாசதர்ப்பணம் அல்லது மருட்பாமறுப்பு" என்னும் புத்தகத்தைச் சென்னை வேதாகமோக்த சைவசித்தாந்த சபையார் பதிப்பித்து வெளிப்படுத்தினர். அப்புத்தகத்தைக்கண்ட பற்பல வித்துவசிகாமணிகளும், உண்மைச்சைவர்களும், பரமாசாரியர்களின் பெருமை, திருமுறைகளின் அருமை மகிமையாதிய நன்குணர்ந்தேம்; திருவருட்பா என்னுஞ் சொல்லின் இயல்புங்கண்டேம் என்று குதூகலங்கொண்டார். நாளுக்குநாள் அந்நூலைக்கண்ட இராமலிங்கபிள்ளை அபிமானிகள் பலரும் சமயாசாரிய சுவாமிகளின்மீதும், தேவாராதி திருவருட்பாமீதும்

அன்புடையவராய்க் கருங்குழியானையெதிர்த்து ஸ்ரீமத் நா. கதிரை வேற்பிள்ளை அவர்களிடத்தில் அன்புடையராயிருந்தார். அப்படியுடை இராமலிங்கபிள்ளை கட்சியார் என்செய்வார் பாவம்! இன்னுஞ் சில காலஞ்சென்றால் நமது சமயாசிரியரின் பாடல்கள் மறைந்து அழிந்துபோயி விடும் அப்புத்தகத்திற்கு மறுப்பெழுத எம்மால் முடியாதே. சைவாலய மறுப்பென்று எழுதியவைகளில் அநேகர் சிரிப்பர், மறுப்பிற்கு மறுப்பும் வரும், என்றுநினைத்தார். இராமலிங்க பிள்ளை என்பவர் செத்தாரை எழுப்புவேனென்று சொன்னமை யுஞ் சங்குப்பம் கோர்ட்டிலே பொய்ச்சத்தியம் பண்ணினமை முத லிய இவை அக்காலத்தில் உண்மையாக நிரூபித்தவையாயினும், அவற்றை இக்காலத்தில் மெய்ப்பித்தல் மிக்க கஷ்டமென்றும், வழக்குமிகுத்தால் நா. கதிரைவேற்பிள்ளை அவர்கள் அருளித்தாங் கள் சொல்வதுபோல இராமலிங்கபிள்ளை பாடல்கள் அருட்பாவா கும் திருமுறையாகும் என்று எழுதிக்கொடுப்பாரென்றும், அது லை புகழ்ந்துப் பிரசித்தப்பண்ணிவிடுவாரென்றும் எண்ணி, இராம லிங்கபிள்ளையின் தமையனார் மகனான சென்னை இராயபுரம் வடிவே ற்பிள்ளை என்பவரைக்கொண்டு சென்னை டவுன்போலீஸ் கோர்ட் டில் சென்ற ஐப்பசிமீ 26௨ மருட்பா மறுப்பு என்னும் புத்த கத்திலிருந்து 27 விஷயங்களை எடுத்து, அவை பொய்யென்றும் அவதூறென்றும் ஒரு வழக்குக் கொண்டுவந்தனர். அவ்வழக்கு இலக்கம் 5610.

சென்னை ஹைகோர்ட்டு வாசால நியாயதூரந்தரரும் ஆந்திர திராவிட ஆங்கில சம்ஸ்கிருத வித்வத்துவமுடையவருமாகிய பிரம ஸ்ரீமத் வி. விசுவநாதசாஸ்திரியார் B. A , B. L. அவர்களும், பிரம ஸ்ரீமத் எம். சாமசாவ் B. A., B. L. அவர்களும் மருட்பாமறுப்பு என்னும் புத்தகத்தைப் பார்த்து அதில் இராமலிங்கபிள்ளை "சது மறையாகம சாத்திரமெல்லாம் சந்தைப்படிப்பு, என்றும் வேதா கமங்களாற் பிரயோசனமில்லையென்றும் நிந்தித்தார் என்பதை யறிந்து இப்படிப்பட்டவரா அருட்பிரகாசவள்ளலார் இவர்பாடல் களை அருட்பா என்றுவிசனித்துக்காங்கள் இந்த வழக்கிலேற்படு

முடையவர்களாகவும், சிவபக்தி, சிவனடியார் பக்திகளிற் சிறந்த
வர்களாகவும் பொலிந்து தோன்றினர். அவர்களோ ஸ்ரீ சிதம்பரம்,
திருப்பரங்குன்றம், கடலூர், திருப்பாதிரிப்புலியூர், காஞ்சிபுர
பாலூர், திருக்களிகை, அயன்புரம், குத்தப்பாக்கம், கொசபூர்,
திருமுருகன்பூண்டி, புதுச்சேரி, கோலியனூர், விழுப்புரம், சிக்
கந்திராபாத், சென்னை முதலிய இடங்களில் வசிப்பவராவர். சைவ
சித்தாந்த பானுக்கள், மகாவித்வான்கள், ஆசிரியர்கள், குருக்கள்
மார், மடாதிபதிகள், பத்திராதிபர், இராசாங்க உத்தியோகத்தர்,
பிரசங்கதாரர், ஆதீனத்தம்பிரான்மார், தர்மகர்த்தர்கள், எனப்பல
திறப்பட்டவராகக் காணப்பட்டார். அச்சாட்சிகளைக்கொண்டும்
இராமலிங்கபிள்ளை அருள்பெற்றவராகாரென்றார், அவர் தாமே
தற்கொலை செய்துகொண்டாரென்றும், அவர்க்குத் திருவருட்
பிரகாச வள்ளலாரென்னும் பெயரும், அவர் பாடல்களுக்கு அரு
ட்பா, திருமுறை என்னும்பெயர்களும் தவறென்றும், மற்றைய
நடவடிக்கைகள்யாவும் புத்தகங்கள், பத்திரிகைகள், விளம்பரங்
களிற் காணப்பட்டபடி புண்மையாகவுள்ளனவென்றார், தேவார
முதலிய பன்னிரு திருமுறைகளே திருவருட்பா, திருமுறை என்
று சொல்வதற்குரியனவென்றும், இராமலிங்கபிள்ளை பாடல்கள்
சைவ சித்தாந்தத்திற்குமாறுகி விஷங்கலந்த பால்போல்
இருக்கின்றன வென்றும் நிரூபிக்கப்பட்டன. மருட்பா மறு
ப்பைத் தாபிக்கவந்த சாட்சிகள் எல்லாம் வியந்து போற்றத்
தக்கவராயினும், அவருள் சைவ சித்தாந்த மகாபீடம் மகா சற்
குரு காசிவாசி ஸ்ரீலஸ்ரீ சி. செந்திநாதசுவாமிகளின் வாய்
மொழிகள் கேட்டுணர்ந்திக்காத சைவசித்தாந்திகளுமுளரோ.
வாதிபக்கம் சாட்சியாகவந்த மகாவித்வான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை
அவர்களின் மாணாக்கரும், சென்னைப்பிரசிடென்சிக்காலேஜ் தமிழ்
ப்பண்டிதருமாகிய பிரம ஸ்ரீமத் உ. வே. சாமிநாதஐயர் அவர்கள்
திருவருட்பா என்பது தேவார திருவாசக முதலியவற்றிற்குச்
சொல்லவேண்டுமேயன்றி, இராமலிங்கபிள்ளை பாட்டுகளுக்குத்
திருவருட்பா, திருமுறைஎன்றுசொல்வது தவறென்றும், அப்

ஞாயவாதத்துச் சொன்னதி ன்றைப்பட்டம் நீதிக்கலக்கு இராமங்கத் தாராலும் உறுதிப்படுத்தப்பட்டது. இம்மங்கல குருநாதசங்கத்தி அறிக்கையுடனே ஸ்ரீ சிதம்பரம், மதுரை, காஞ்சி, திருவண்ணாமலை, திருச்செந்தூர், வேதாரண்யம், இராமேச்சுரம், திருமயிலாப்பூர், திருத்தணிகை முதலிய பிரதான தலங்களிலே கோபுரங்களோடும் தீபங்களிட்டார்கள். கொடிகள் நாட்டினர், அதிர்வேட்டுகள் முழக்கினர். சென்னையிலுள்ள ஆலயங்களோடும் அபிஷேகம் அர்ச்சனை, உற்சவம், தேவாரதிதிருவருட்பாப்பாராயணம், மகேஸ்வர பூஜைகள் செய்ததுபோல வெளி தலங்களில் அன்றி இலங்கை பினாங்கு, சிங்கப்பூர், சிக்கந்திராபாத் முதலிய இடங்களிலும் இயன்றவியன்ற சிவதருமங்களும் கொண்டாட்டங்களுஞ் செய்யப்பட்டன. கற்கண்டு, சர்க்கரை, சிற்றுண்டிகள், தாளிகோங்கள் வஸ்திரங்கள், பழவகைகள் முதலியவைகளும் ஆங்காங்கு வழங்கப்பட்டன. தேவார திருவாசக முதலியவைகளே திருவருட்பா என்பதும், இராமலிங்கரின் பாடல் மருட்பாவென்பதும் இவ்வழக்கால் உறுதியாயின. இராமலிங்கரின் பாடல் ஆபாச தர்ப்பணம் அல்லது மருட்பாமறுப்பு என்னும் நூலும் உண்மையுள்ள நூலாயிற்று. இவ்வழக்கிற்கு உதவிசெய்த உண்மைச் சைவர்கள்யாவருக்கும் நன்றிகூறுகின்றேம். ஸ்ரீமத் கதிரைவேற் பிள்ளை அவர்கட்கு உதவிபுரிந்த தேவகோட்டை நகரப்பிரபுக்கள் ஸ்ரீ காஞ்சிச் சித்தாந்த சிவநேசதிருக்கூட்டத்தார், யாழ்ப்பாணத்து மகாவித்வான் ஸ்ரீமத் சி. கணபதிப்பண்டிதர் அவர்கள், சென்னை வேதாகமோக்த சைவசித்தாந்தசபையார், இராயப்பேட்டை ஸ்ரீபாலசுப்ரமண்ய பக்தஜனசபையார், புரசைப்பரசிவதமிழ் வேதபாராயணசபையார், திருவல்லிக்கேணி அறுமுகைய பக்தஜன சபையார், சென்னைச் சைவசித்தாந்த சங்கத்தார் முதலாயினோர்களின் சிவசேவையுந் திருவருட்பாமறுப்பு விசாரத்துக்கவே. இவ்விஷயங்களெல்லாம் உலகத்திலுள்ளோர் அறிந்து நாளும் சிவபுண்ணியமுடையார் யாவரும் பண்டிதமணி பரமாசாரியசுவாமிகளின் திருவருளை வேண்டி நிற்கும் இவ்விஷய மஹாசபையினர்.

## ஸ்ரீ திருநாவுக்கரசு நாயனார் கட்டியம்

1 திருமுனைப்பாடிவருவீரா - திருநாவுக்கரசென்றவீரா
வருமுனைப்பகைவென்றசூரா - வாழ்வானமூம்முறைசெய்தீரா
2 மதமோடமறைபாவெயமே - மருவலர்க்கடியன்னபயமே
சதமானசைவத்தினயமே - தருமசேனர்க்கபயமே
3 சீற்றமையுமின்பானநிதியே - கெடுங்கலேட்புணையாக்குபதியே
மேற்றவர்க்கன்பானதுதியே - விடநீக்கியுயிர்வைத்தகதியே
4 திலகவதிபின்வந்ததுணையே - தியபவநீக்கருட்புணையே
கலகமில்லருளுக்கிணைணையே - கதவைத்திறந்தையிங்கணையே
5 உழவாரப்பணிகொண்டபொருளே - உம்பர்க்குமெட்டாததெருளே
பழகாத பரமதத் திருளே - பாவியேமுய்யவன்பருளே
6 தாண்டகந் தந்தருளு நிருபா - தருமமைப்பொருளானசொருபா
ஆண்டெனமைக்காக்கின்றவிருபா - அப்பனெனநின்றிலங்கிருபா
7 படிக்காசுவாங்குபூபாலா - பழமறைகளோலமிடுதாலா
செடிக்காமன் வெள்கவரு கோலா - திருவாமூருறுவர்கோன்பாலா
8 அப்பூதிதன்பவைகளோங்தோய் - யருட்பாவழங்கவருமைங்தோய்
செப்புமறுபூதியுளமைங்தோய் - திருவிபூதிப்பொலிவதிங்தோய்
9 சங்கரன்பாதமதிநேயா - சாயுச்யமுற்றவொருதூயா
நங்கள்குலதெய்வசகாயா - நவிலருண்மொழிமன்னுவாயா
10 நேரிசைமலர்ந்தநிற்கனமே - நிருபனெனநின்றபொற்றனமே
பாரிசைத்தாண்டவிற்பனமே - பரவுதும்மூன்றுமுறைதினமே

## ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் கட்டியம்

1 சிவனூருக்கொண்டசுந்தரனே - திருமலர்த்தாமஞ்செய்பரனே
பவவிடமடக்கு செங்கரனே - பரமனுக்கொருதோழவுரனே
2 பரவையடிவளேயாதமேரே - பாதியற்றா இட்டசீரே
யரன்வலிந்தாட்கொண்டநேரே - யருளியாப்புறைபெய்தகாரே
3 சங்கிலித்தொடர்கொள்குஞ்சரமே - தருபத்தர்புகழ்வைபஞ்சரமே
எங்கிதிப்பாசமறுசரமே - யியலிசைத்தமிழ்செய்தவரமே
4 தடங்கராமுதலையழைத்தவனே - தாளுதாண்மலர்சிரத்தவனே
யடங்காதபுகழ்நிறுத்தவனே - யருட்பாவோர்முறைமலர்த்தவனே
5 வன்றொண்டநாமத்தெமண்ணால் - மணக்கோலமுற்றசீரேந்தால்
அன்றிண்டைமலர்கொய்தவள்ளால் - ஆருரிலம்மானுக்காளால்
6 கச்சியிற்கண்பெற்றகண்ணே - சமுல்சேருமன்பர்களோகண்ணே
யுச்சிதத்தொண்டர்பெறுமெண்ணே - யோங்குபரவெளியானவிண்ணே
7 வெள்ளானைமேற்சென்றவெளியே - விண்டேவுங்கண்டிடாவொளியே
பள்ளவயனெற்பெற்றவளியே - பரமதப்பஞ்சிக்குவளியே

## திருவருட்பா.

பன்னிரு திருமுறை யருட்பாவே - யன்னிய மறுமுறை மருட்பாவே
சீரியர் சொல்லுவ தருட்பாவே - சீரிலர் சொல்வது மருட்பாவே
தேவா ரந்தமை நாடுவமே - சிவனு ரடியிணை பாடுவமே
செந்தமிழ் வேதந் தேவாரம் - என்பது வேச தாசாரம்
நால்வர்கள் வாயரு ணற்பாவே - நல்லருட் பாவெனத் தேர்ந்திடுவீர்
பன்னிரு திருமுறைப் பாசுரமே - எண்ணிலத்தோர் கட்குமீசுரமே
அருட்பாவென்பதை யறிந்திடவே - தெரிப்பாஞ்செயக்கொடி சிறந்திடவே
வேழந் தருட்பா வெழுந்தனவே - வெறுமையர் மருட்பாவொழிந்தனவே
திருமுறை யுற்சவந் தரிசித்தோம் - தீயவொ ழிந்தருள் பரிசித்தோம்
காஞ்சித் திருமுறை யுற்சவமே - நாஞ்சிவ னருள்பெறு சற்சகமே
பன்னிரு திருமுறை வாழியவே - பகர்ந்தோ ரென்றும் வாழியவே

---

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# அருட்பாவெற்றிக்கையுறை வாழ்த்து.

ஸ்ரீவிகடசக்கரவிநாயகர், ஸ்ரீகச்சியேகம்பர், ஸ்ரீகாமாட்சியம்மை
குமாரக்கடவுள் என்னுமிவர்துதி, வண்ண விருத்தம்.

ஞானமும்மத போதகன்றிடு நங்கள்கச்சியி லேயமர்
நளினமென்விழி யருளவர்ச்சனை யன்பியற்றிய மாயனூர்
கருசுதர்சன மிடவுகுற்றிய மெய்யெலாம்வளை நடேசா

தானவித்தக நாயகன்மலை மங்கையின்றனை மாவடு
தருகைமுன்வளை யணைதழும்பிவை யன்றியெவ்வடி வேயிலார்
தழையுமந்திர வடிவரம்மறை தந்தமாந்தரு நிழலாரே

மோனநன்மொழி யானதந்தையி னஞ்செவிக்குவை பூரண
முதியநல்லறி வையுமெய்க்குரு மூர்த்திகந்தனை யீன்றொரு
முதல்வியன்பினை விழியினம்மையெ னிந்தநால்வரை முனுவாமே

தீனகின்றிடு ராமலிங்கன செய்யுளங்கவை யேமுறு
திருவைதந்திர மதிணியைந்திடு தெய்வமுக்கவை யோடவே
திடமுறுத்தொரு பனிருமெய்ம்முறை செப்பநாட்டிய வருளாலே

---

## இந்தியசக்கிரவர்த்தி, சக்கிரவர்த்தினி வாழ்த்து.

உலகமெங்குஞ் செங்கோலைப் புரிசக்ரவர்த்திமுடி யுடையேழெட்வார்ட்
நலகமனைலா மன்னவர்க்குங் கேசரியிந் தியதேச நலத்தா ரெல்லா
மிலகுதங்கண் மதங்காக்கப் டெருங்கருணை யிருத்தியர சியற்றுங்கோமான்
கலகமின்றி யலெக்சாண்டி ராவலையோ டெப்போதுங் கலந்து வாழி

## சென்னை நியாயதலச்சிரேட்ட நீதிபதிவாழ்த்து.

மகமதிய சாதியினி லுயர்ந்தமர பினிற்பிறந்து வண்மை சீலஞ்
சகமதிக்கு மீகைபொறை சத்தியநல் லறிவுடைமை தயையன்பு,
வகமதியுஞ் செல்வமெலாமடைந்துதன்றன் மொழியினன்றியாங்கிலத்தோ
டகமதிக்கு மாங்கிலமு நந்தமிழு மினிதுதெரிந் திருக்குமேத்தல்

கூடலூர்ப் பகுதிடிப்டிக் கலெக்டராயிருந்து புகழ் கொண்டோ னத்தாற்
றேடரும்மா சாங்கமகிழ்ந் தளித்தபெருங் கலெக்டரெனுஞ் சீர்த்தவேலை
யாடலாம் பார்த்தெவர்க்கு மின்புறுத்து மண்ணலெங்கள் வைசவத்தோர்கள்
நீடவேசெய்ததவப் பயனாகச் சென்னையினி னேர்ந்தான் யாதோ

யாவனெனிற் சென்னையினிற் போலிசுகீ திச்தலத்தி லிருக்குநாய
காவலருண் முதல்வன் ஆ ஜசுர்டீன் உசையின் மகம்மட்கான்சாகேப்
பாவலர்கண் மெய்ச்சியிடும் பெயருடையோ னுண்மைகண்டு பதித்ததீர்ப்பை
யாவரெவர் புகழ்கில்லா ரிம்மருட்பா மறுப்பினுண்மை யியவனேகண்டான்

சைவம்போ காதிருக்க மனுவென்பா னிவ்வுருவிற் சார்ந்தான் கொல்லோ
தெய்வந்தா னின்றதுவோ திருவருட்பாச் செய்ததுவோ சீர்சால் கந்த
வையன்றான் செய்தனனோ கரிகாலன் வந்தனனோ வமைத்ததீர்ப்பால்
வையமெலாங் கொண்டாடச் செய்தவெங்க ணீதிபதி வாழிவாழி.

---

மருட்பா மறுப்பின்வாய்மைகாட்டி
யருட்பாப் பன்னிருமுறையெனவறைந்த
நியாயதுரந்தரர் நிலைமைவாழ்த்திவை

தேனைக்கா மலர்கொடருச் சித்தேத்தும் புண்ணியத்தைச் செய்தபூத
வானைக்கா வரசளித்த வருட்பிரகா சப்பெருமா னடியேபோற்றி
வானைக்காவைப்பெறலின் வைத்திலிங்க சாத்திரிமன்வரத்தாற்பெற்றேன்
சேனைக்காவலர்மதிக்குநல்லுணர்வான்பலமொழியுஞ்சிறப்பாக்கற்றோன்

அரசாங்கப் பிரமாண மனையெல்லாங் கரைகண்டோ னடுத்த மாந்தர்
சிரசாங்க மெனவழக்கை மேற்கொண்டே தன்னதெனச் செறிந்து நீதிப்
பிரசாங்கம் பொழிந்துவெற்றி யுறச்செய்வோ னிறையறிவு பெறுதர்மங்
கரசாங்க வழிவெற்றை யுடையவனெஞ் சிவனடியே காணுமன்பன்

மகாவித்வான் ஸ்ரீமத் சி. சுவாமிநாதபண்டிதர் அவர்கள் வாழ்த்து

தேவாரமுதலாய திருவருட்பா வல்லவென்றுஞ் சிறப்பில்லாத
தாவாரும் ராமலிங்கனே குரவனவன்பாடல் சாற்றலாகு
மாவாற வென்றுமிங்குச் சிலபோலிச் சைவர்களே நடித்தாரத்தை
யாவாவா சகிக்காது தர்ப்பணநூல் வெளியிட்டா ரன்பரயன்றே

மறுப்பெழுதமுடியாது வழக்குவைக்கிற் றம்மானத்தின்படியே யெம்மோர்
வெறுப்பாக ராமலிங்கன் பாடலருட் பாவெனவே விள்வாரென்றங்
கொறுப்பாக வழக்கிட்டா ரவர்தமது பொய்மையெலா மோடப்பத்தோ
டுறுப்பாகு மிருமுறையுந் திருவருட்பா வெனவொளிர வுய்த்தான்யாவன்

செந்தூர்நங் குகக்கடவு ளடிமறவாத் தலையன்பிற் சிறப்போனொரு
நந்தூருங் காத்தார்க்கு மறிவரிய பரம்பரன்றனலத்தஞானம்
வந்தூருமெய்யுளத்தோன் வடமொழியுந் தென்மொழியும்வரம்பேகண்டோ
னந்தூரின் யாழ்ப்பாணத் தொருசார்வண்ணைப்பதியோ னருளான்மிக்கோன்

நாவலகம் பெருந்தகையார் மண்ணொருவுந் துக்கமெலா நீங்கியோடப்
பாவலருஞ் சித்தாந்தக் காவலருந் தலைநிமிர்க்கப் பத்தியோங்கப்
பூவலயத் தோர்சிறக்கப் புலமைமிக்குச் சித்தாந்தப் பொற்போட்ட
காவலித்த நாவலனுஞ் சாமிநாதப் பெரியோ னருளான்வாழி.

## உபகாரிகளின்வாழ்த்து.

திருவருட்பாச் சிரிலக்குமித்தருமக் கியன்றபொருள் செறித்தோர்யார்க்கும்
திருவருட்பாச் சீர்சொற்றே செறிவித்தோர் முந்தியநூல் சினத்தராமன்
றெருமருட்பா மறுத்தவிளம் பரங்களுடன் பத்திரிகை சிதைவில்லாமல்
வருதிருபங் கோட்டிலளி யிவர்க்கெல்லா மென்செயுமோ மல்லன்ஞாலம்

## காஞ்சிபுரம் ஸ்ரீஏகாம்பரேச்சுரன்கோயிற்றருமகர்த்தரும், ஸ்ரீ சித்தாந்தசிவகேசத்திருக்கூட்டத்தின் சபைத்தலைவருமாகிய ஸ்ரீமான் கா. மு. சுப்பராயமுதலியாரவர்களின் வாழ்த்து.

எச்சிறப்பு முளகச்சிப் பதிவாழு மழவர்குலத் தேறுநங்க
ளுச்சிதவே கம்பன்றன் றிருக்கோயிற் றருமகர்த்த னுவக்குஞ்சீர்த்தி
யிச்சகத்தின் மிக்குள்ளோன் சமிந்தாபொன் றிருக்குமெங்க ளேந்தலீகை
வைச்சகரத் தோன்புலவர் வழுத்துபா மாலைபல வயங்கப்பூண்டோன்.

அரசினர் சன்மானத்தோன் சௌரவநீ தித்தலத்தி னதிபன் மெய்ம்மைத்
தருமவழிக் குடலுயிரைத் தானளிப்போ னிவ்வழக்குச் சகாயன்யாண்டுங்
கருமமொன்றை யெடுத்தக்கா லதுமுடித்துப் பெரியவெற்றி கண்டோன்
பொருசுப்பராயவேள் முதலிப்போர்ச்சீமானிங் குலந்தேவாழி. [மேன்மை

காஞ்சி, ஸ்ரீகச்சபாலேசுர சுவாமிகோயில் தர்மகர்த்தர்
ஸ்ரீமந் ம, த, சாமிநாத முதலியார் அவர்கள் வாழ்த்து.

திர்சமா ரெழுதேத்துங் கச்சியினிற் குமரன்பா ளினைப்போன் கல்விக்
குர்சமா நிற்குமொரு செங்குந்தர் குலத்தில்வரு முண்மை சான்றோன்
கச்சபா லேசுரன்கோ விற்றரும கர்த்தனெனக் கதித்தோ னந்தா
ணச்சியா வருந்தொழுமெஞ் சிவஞான யோகியாமர் நலத்த வீட்டோன்

தனிகையான் மியமுரைத்த சதாநனுக்கு முதவிசெய்தார் தந்தோன்ற
லணிகையான் பெருமாற்றொ ரடிமைதிரு வருட்பாலி னன்போன் மிக்க
பணிகையா குடிகொண்டோ னிவ்வழக்கிற் குதவிசெயும் பண்போருன
வணிகைமா லெனுஞ்சாமி நாதப்பேர் முதலியுக மமர்ந்தே வாழி

காஞ்சிபுரம் ஸ்ரீ சத்யஞானேசுவரர் கோவில் தர்மகர்த்தரும் ஸ்ரீகாஞ்சிச் சித்தாந்த சிவநேசத் திருக்கூட்டத்தின் அக்ராசனாதிபதியுமாகிய ஸ்ரீமந், அப்பாஸாமி செட்டியாரவர்களதும், ஸ்ரீகாஞ்சிச் சித்தாந்த சிவநேசத் திருக் கூட்டத்தின் காரியதரிசியும், முனிசிபல் கவுன்சிலருமாகிய ஸ்ரீமந், து. அ. பாலசுந்தரமுதலியாரவர்களதும் வாழ்த்து.

பத்திக்கோர்விதைசாந்தன் குணக்குன்றேன் றிருக்கோயிற்பணியேபூண்டோன்
சத்தியனப் பாசாமிச் செட்டியெனுந் தலைவா னன்பு
வித்தைபொறை யுடையானன் முனிசிப்பல் கவுன்சிலன்மெய்விருப்பான்மிக்க
வுத்தமன்பா லசுந்தரனுஞ் செய்யுதவிக் கெல்லையின்றே யுவந்து வாழி

திரிசிரபுரம் ஸ்ரீதாயுமானேசுரர் கோயில்தர்மகர்த்தரும் ஸ்ரீகாஞ்சிச்சித்தாந்தசிவநேசத்திருக்கூட்டத்தின் கௌரவ அக்ராசனாதிபதியுமாகிய ஸ்ரீமந், நா, கங்காதர முதலியாரவர்களதும், நூல்மணிகை ஐ. ஒதியப்பமுதலியாரவர்களதும், வாழ்த்து.

செவ்வந்திப் பெருமான் தருமநற் றலைமை செறிந்தவன் வாக்கினிற்சிறந்தோன்
றெவ்வந்தித் தடங்கும் பெருமையன் கங்கா தரனெனச் செறிந்தவன்றுனு
மொவ்வந்த சான்றுக் குரியவ னோதி யப்பனன் முதலியுமுவந்தே
செய்வந்த நன்றி சொலுந்தரத் தன்றே சிரியர் வாழிய சிறந்தே

மாயாவாததும்சகோளரி, ஸ்ரீமந், நா, கதிரைவேற்பிள்ளை அவர்கள் மாணவரும் ஸ்ரீகாஞ்சிச் சித்தாந்த சிவநேசத் திருக்கூட்டச் சபையாருள் ஒருவருமாகிய
ஸ்ரீமந் பெ. கோவிந்தராஜ முதலியார் அவர்கள் வாழ்த்து.

காவிந்த னலிசெலவைத் தடிமிந்தக் காஞ்சிநகர்க் கருதும் வேளாண்
மாவிந்தக் குலமணிநம் பெருமாண்முன் னவன்மைந்தன் மறுவில் சீர்த்தித்
தேவிந்த னரவிந்தன் செறிநந்தன் றெரிவரிய திருக்கோ விந்தன்
நாவந்த புகழேந்த னடியுந்தன் மணப்பதித்த நலத்தோன் பாதோ
தேசன்றே வாரமுதற் றிருவருட்பா நேசனந்தஞ் சிறந்தநேயன்
வாசங்கான் மலர்த்திருவின் வாசன்யாற் றலர்காசன் வழுத்துங் கல்விப்
போசன்கோ விந்தரா சப்பெயர்ப்பா வலனிரைந்து பொருந்து [illegible]
மாசமுற்றீ ருதவிக் கிங்கெவல வன்னவனுவாழி மகிழ்தவாழி

காஞ்சீபுரம் ஸ்ரீ ஆதிபுரீசுரஸ்வாமிகோயிற் றருமகர்த்தரும் ஸ்ரீ சித்தாந்த
சிவநேசத்திருக்கூட்டத்தின் காரியதரிசியு மாகிய
ஸ்ரீமான், பி. சொ, முருகேசமுதலியாரவர்கள் வாழ்த்து.

சைவத்தோர்க் குயிரெனவுஞ் சாத்திரத்திற் குடலெனவுந் தழைப்போனும்
மைவைத்தோர் கடிவைசெயுஞ் சிவநேசப் பெருங்கூட்டம் பதிக்கும் நேயன்
பொய்வைத்த மருட்பாவிற் கிடமின்றுஞ் முருகேசப் புலவோன்கச்சித்
தெய்வம்போற் செயுமுதவி மறக்குமோ வையமவன் சிறந்து வாழி

முத்தி நலந்தருஞ் சிறந்த கச்சிபம்பதியிலே ஸ்ரீ ஏகாம்பரேஸ்வரர் கோவிலில்
ஆசாரியர்களின் பன்னிரு திருமுறைகளை யெழுந்தருளப்பண்ணி 22-1-05 ஆகிய
குரோதி வருஷம் தை மீ 10 உ ஆதிவாரசுபதினத்தே திருவருட்பாவிஜயமகோற்சவம்
செய்த காஞ்சி ஸ்ரீ சித்தாந்த சிவநேசத்திருக்கூட்டத்தார் வாழ்த்து.

முத்திபெறு நலந்தருஞ் சிறந்திடாயிருங் காஞ்சியினின் மொய்குரோதி
யொத்தியமா தைமதியிற் பத்திற்சேர் ததிவாரத் தீராறென்று
வைத்தமுறைத் திருவருட்பா மகோற்சவத்தைத் தில்லையிற்போல் வயமாயீது
வித்தகமாச் செயுங்காஞ்சிச் சிவநேசத் திருக்கூட்டம் விளங்கிவாழி
இத்தினத்தி னுற்சவம்போற் காஞ்சியினிற் கண்ட தில்லை யிசைந்தகூட்ட
மித்தினத்தி னிணைந்தார்போ லெக்காலு மியைந்ததில்லை யீராறென
பத்தியருட் பாமகிமைப் பிரசங்க மதைப்போலப் பார்த்தோமில்லை
சத்தியங்கா ணன்பர்களே யிவையருட்பாப் பெருமையெனச் சாற்றலாமே
சோதியார் காஞ்சியினினால்வருக்கு மபிடேகந் துதிக்கச்செய்தே
யாதியாங் கோயிலிபத் தருட்பாக்க ளேற்றுவித்துப் பவனியார்ந்து
கோதிலா யிரக்காலோர் மண்டபத்தி னருட்பாவின் மகிமைக்கோட்டி
தீதிலா தாக்குவித்துத் திருமுறையி னுற்சவத்தைச் செய்தோர்வாழி

சென்னை சிந்தாத்திரிப்பேட்டை, ஸ்ரீ அங்காளபரமேஸ்வரிகோயில் தர்மகர்த்தரும்
சர்ச் ஆப் ஸ்காட்லாண்டு மிஷின்பாடசாலை உபாத்தியாயரு மாகிய சி,
முனிசாமிஉபாத்தியாயர் அவர்கள்வாழ்த்து.

சென்னையினிற் சைவநலந் திகழ்சிந்தா திரிப்பேட்டை சிறக்கவாழ்வோ
னன்னையங்கா ளம்மையுறை யொருகோவிற் றருமகர்த்த னடுத்தோர்ப்போற்று
முன்னவனைச் சிவபுராணப் படனதர்ம முனிசாமிக் குரிசில் செய்த
வின்னமெனத் தொகுத்துரைக்க முடியுமோ வவன்கீர்த்தி யிலங்கிவாழி

சென்னை சிந்தாதிரிப்பேட்டை வாசரும் பன்னிருதிருமுறைத் திருவருட்பாப்
பரிபாலனருமொருவரும், பே - யெக்சாமினர் ஆபீஸ் உத்தியோகத்தரு
மாகிய ஸ்ரீமந், ஆயலூர், வேதாசலமுதலியார் அவர்கள் வாழ்த்து.

ஆயலூ ருழவர்குலத் தருந்தவத்தின் பயனுருவ வடைந்தோனைப்
பாயலூர் திருமாற்கு முடிவரிய மெய்மையிலைப் பலிப்போன்சைவத்
தாயலூ ருயிர்களுக்கு மருந்தன்னும் புலவரெமா மடுக்கி னோன்மைச்
சேயலூர்க் குரிசில் [illegible] தாங் கினோக்குநேயன்.

பேயெக்சா மினர்க்கந்தோ ரசாங்கப் பெருப்பணியிற் பெட்பாய்ந்தபோ
ஞயன்மார் கழலடிக்கு மறவாத சிந்தைசெய்த நலத்தோன்றன்னைக்
காயசிந்தா திரிப்பேட்டை வாழும்வே தாசலத்தெ மண்ணல்செய்த
தாயகமா நன்றிக்கோ ரளவின்றே யன்னவன்சீர் சாற்றவம்மின்.

பன்னிருதிருமுறைத் திருவருட்பாப்பத்தியினரும், அவ்வழக்கிற் சிறந்தவுட-
னுழைத்தவருமாகிய ம-ா-ா-ஸ்ரீ இராமநாதபுரம் வெள்ளையதேவர் அவர்களதும்,
சிந்தாதிரிப்பேட்டைவாசரும்மதராஸ்பாங்கியுத்தியோகத்தருமாகிய ம-ா-ா-ஸ்ரீ
ஆயலூர் குமாரசாமிமுதலியார் அவர்களதும், வாழ்த்து.

கட்கிமையுங் கடலுக்கோர் கரையுமெனக் கலந்துதவி களிப்பாச்செய்த
வுட்கலிலா வுளத்தோன்வெள் ளையதேவக் குரிசிலவனின் னுரின்வாழுந்
திட்பமுள சைவநலம் பரவலிக்கு மெய்ந்நலத்தோ னாயலூர்ச்சார்
நட்பினனேர் குமாரசா மிப்பெயரின் முதலோனு நாளும்வாழி.

தேவாரமுதலிய திருவருட்பாப்பத்தியினரும் அரசாங்க வுத்தியோகத்தருமாகிய
சிந்தாதிரிப்பேட்டை ம-ா-ா-ஸ்ரீ சிங்காரவேலு முதலியார் அவர்கள்வாழ்த்து.

சிங்கார முத்தமிழ்ப் பன்னிரு மாமுறை தம்மொடுஞ்சேர்த்
துங்கார முன்னருட் பாவழக் காணவை சொல்லு வெற்றி
யிங்காரத் தந்தவர் சிங்காரவேன் முத லிப்பெயரோன்
மங்காத மற்றைய செல்வரும் வாழ்க மகிழ்ந்தென்றுமே.

சென்னைச் சபையார்கள் வாழ்த்து.

கலைமறையாகமவுக்த சித்தாந்த சபைராயப்பேட்டைநாடுந்
தலபால சுப்ரமண்ய பக்தசன சபையாருந் தரிக்குமேன்மை
வலமுத்துக் குமாரசா மிப்பெயரின் சபையாரும் புரசைவாய்ந்த
நிலவுசபை நங்கள்சைவ சித்தாந்த சங்கமதும் நின்றேவாழி.

யாழ்ப்பாணத்து வேளாளகுலதிலகரும் சைவசித்தாந்தஅத்துவிதபரிபாலனுப
காரச்செல்வரும் ஆகியதெல்லியம்பதி ஸ்ரீமந் கதிரேசப்பிள்ளைஅவர்கள்வாழ்த்து

வேளாள குலமகிபன் யாழ்ப்பாணத் தெல்லிநகர் வியனு ராளி
தாளாள னுபகாரப் பெருங்குரிசில் சைவநலஞ் சாற்றுங்கேள்வி
தேளாளுங் கருணைதனைச் சேர்ந்தவர்க்கு முயிர்கொடுக்கு மாட்சிவீரம்
நாளாளுங் கதிரேசம் பிள்ளையண்ண லூழிதொறு நயக்கவாழி.

ஸ்ரீஏகாம்பரசிவயோகிகள்மாணுக்கரும் காஞ்சிச்சித்தாந்தசிவநேசத்திருக்கூட்ட-
த்தின் கௌரவப்பிரசாரகரும் உரையாசிரியருமாகிய ஸ்ரீமத், கா, ஆலாலசுந்தரம்
பிள்ளை அவர்களதும்பெருநகர்ப் பிரசங்காமிர்தமும் சைவப்பிரசாரணரும்
ஆகிய, வித்துவான், பெரு-இரத்தின முதலியார் அவர்களதும்வாழ்த்து.

வித்துவா னாலால சுந்தரவேள் செய்ந்நன்றி
நத்துவாஞ் சைவமதை நாட்டுவான் — புத்தமிர்த
மென்னப் பிரசங்க மேற்றிரத்ன மாமுதலி
மன்னன்சீர் வாழியவே மன்.

சென்னைப்பிரதம நியாயஸ்தலவாசால நியாய துரந்தரராகிய
ஸ்ரீமந், மாசிலாமணிப்பிள்ளை பி - ஏ, பி - எல், அவர்கள்வாழ்த்து.
நிலைமண்டில வாசிரியப்பா.

திரைமணிகொழிக்குபுபெருவளம்பொலிந்த, வாரிசூழிலங்கையினவிரியாழ்ப்பா
ணமுழியர்குலத்துத்தோன்றியோன்மிக்க, நியாயதுரந்தரனெனியோன்சீர்த்தி [ன
யான்றாண்டேக்குபுவிரியபிறங்கு, மாண்டகை யகம்பிறக்கோருறைமகோ
பிறையணிசடைத்தப்பெருந்தகைப்பெயரொடு, கனகசபையின்பணிபெனைக்காமனைப்ப
தோலாகாவின்மேலமறைந்த, மாசிலாமணியெனுமவண்மையோங்புரசை [ற்றிக்
வாரன்சகக்குபகாரிமன் புரிந்த, வேதவிகடமக்கிள் கனவிலை யன்றேன்
அன்பருள்படைத்தவறத்தின்செல்வியார், பார்வதியாகனின்பொலிகவிந்நிலத்
உ. [தே.

# திருவருட்பாமகோற்சவ மகாவிபவம்.

ஸ்ரீ விகடசக்கர விநாயகர் துதி.

கருவருட்பா விளக்கமதைக் கண்டொருப்பா டுறக்குமெங்கள் கதித்தநால்வர்
திருவருட்பாமகோற்சவத்தைச்செய்யொருப்பாடுறக்கவிங்குச்செளிக்குமாலோ
பெருவருட்பா விளக்கியக்கவிருட்பாக்கன் மருட்பாவின் விழுந்துமாளச்
செருவருட்கா விளக்கியபர் றெருட்பா வுளத்திருட்பாச் செறிக்குமாவே.

ஸ்ரீ ஏகாம்பரநாதர் துதி.

கம்பனைநன் மலர்க்காத்துக் கம்பனைப்போழ் கம்பனைவேட் கம்பிறைனைக்
கம்பனைவன் கந்தரப்பூங் கொம்பனையோர் பங்கனைமாக் கம்பிறைனைக்
கம்பனையொன் கன்னற்பூ கம்பனைசூழ் கம்பனையிற் கச்சியாரே
கம்பனையோர் கம்பனையாக் கம்பெருக்கக் கண்டொழ்வார்.

வைதிகசைவ சுத்தாத்துவித சைவசித்தாந்த பரமசந்தானாசாரிய சுவாமிகளுள் முன்னிற்பெடிக்கும் முத்தியளித்த ஸ்ரீ உமாபதி சிவாசாரிய சுவாமிகள் திருமுறைகள் பன்னிரண்டின் மீதும்வைத்த பேரன்புகாரணமாக, திருமுறைகண்டபுராணம், சேக்கிழார் நாயனார் புராணம், என்னுமிவ்வருநூல்கள் செய்து எம்மையெல்லாந் தெளிவித்தருளினார். அவற்றுள் சேக்கிழார் புராணத்திலே ஸ்ரீ சேக்கிழார் பெருமானையும் அவரருளிய பன்னிரண்டாந்திருமுறையாகிய பெரியபுராணத்திருவருட்பாவையும் சிதம்பரத்திலே இற்றைக்குச்சுமார் ஆயிரத்துமுன்னூறு வருடங்கட்கு முன்னே யானைமீது எழுந்தருளச்செய்து அநபாய சோழமகாராசா அவர்கள் தாமே சாமரம் வீசி மகோற்சவங்

கொண்டாடினார் என்று திருவாய்மலர்ந்தருளியுள்ளார். அவ்வாறுய திருமுறைமகோற்சவ மகாவிபவம் இன்றும் நடக்கக்காண்பமோவென்று சிவநேயச்செய்வர்கள் இருந்தகாலை, கருங்குழி இராமலிங்கபிள்ளையின் பாடல்களை மறுத்து, தேவார திருவாசக முதலிய பன்னிரு திருமுறைகளே திருவருட்பா என நிறுவிய "இராமலிங்கபிள்ளை பாடலாபாசதர்ப்பணம் அல்லது மருட்பா மறுப்பு" என்னும் புத்தகவிடயமாகச் சென்னைநகராதிகாரநியாயதலத்திற்கொண்டுவந்தவழக்குப்பன்னிருதிருமுறைத் திருவருட்பாக் காரராகிய நங்கட்கு ஒருபெருஞ் சயமாகவும் இராமலிங்கர் கட்சியார்க்கு அபஜெயமாகவும் முடிந்தமையால் அந்தத்திருவருட்பாப் பெருவென்றிகுறித்து மேல்வருந்தலங்களிற்றிருவருட்பா மகோற்சவங்கள் கொண்டாடப்பட்டன.

முதலாவது திருவருட்பா மகோற்சவம்.

சென்னை குசிலிக்கடுத்த ஸ்ரீமுத்துக்குமாரசுவாமியார் திருக்கோயிலிலே சென்ற (27—11—04) ஞாயிற்றுக்கிழமை ஸ்ரீகந்தக்கடவுளுக்கும், ஸ்ரீபரமாசாரியசுவாமிகள் நால்வர்க்கும் மகாபிஷேக அலங்கார ஆராதனஞ்செய்து தேவார முதலிய பன்னிரு திருமுறைகளையும் அலங்கரித்துப்பூசைபுரிந்து, சகலவைபவ உபசாரங்களுடன் இரத்தினவிமானத்தில் எழுந்தருளுவித்துச் சைவத்திருக்கூட்டங்களும் சபையார்களும் புடைசூழ, தேவாராதி பாராயணகோஷத்துடன் மாடவீதிப்பவனிவந்து, அவற்றின் பெருமைகளும் உபந்யாசிக்கப்பட்டன. இவற்றைச்செய்தோர் சென்னை ஸ்ரீமதானந்த முத்துக்குமாரசுவாமி பக்தஜன சபையாரும், சைவசித்தாந்த சங்கத்தாரும், சைவசமய பக்தஜனசபையாருமாவர்.

இரண்டாவது மகோற்சவம்.

சென்னை இராயப்பேட்டை ஸ்ரீசுந்தரேசப்பெருமான் ஆலயத்திலே ( 4—12—04 ) ஞாயிற்றுக்கிழமை மேற்குறித்தவாறு சகல விபவங்களும் செய்யப்பட்டன. இது செய்தோர் இராயப்பேட்டை ஸ்ரீபாலசுப்ரமண்ய பக்தஜனசபையாராவர்.

மூன்றாவது மகோற்சவம்.

சென்னைப் புரசைக் கங்காதரேசுரப்பெருமான் ஆலயத்திலே (18—12—04) ஆதிவாரம் ஸ்ரீகங்காதரேசுரருக்கும், பங்கசாட்சியம்மையார்க்கும், ஸ்ரீ சமயாசாரியசுவாமிகளுக்கும், மகாபிஷேக முதலியன நடத்தி பன்னிரு திருமுறைகளையும் புஷ்பப்பல்லக்கில் எழுந்தருளுவித்து மேற்கூறியவாறு நடத்தப்பட்டன. இது செய்தோர் புரசைப்பரசிவ தமிழ்வேதபாராயண சபையாராவர்.

நான்காவது யானைவாகன மகோற்சவம்.

ஸ்ரீ சிதம்பரமகாக்ஷேத்திரத்திலே நாளது குரோதி வருஷம் மார்கழிமீ 10உ ( 14—12—04 ) சனிக்கிழமை யாகிய ஆருத்திராதரிசனத்திற்கு அடுத்தநாளிலே, வேத சிவாகம புராண தர்க்க வியாகரண மகாவிற்பன்னர்களாகிய தில்லைவாழந்தணர் பெருமான்களான ப்ரம்ம ஸ்ரீமத் சி- ஐ- தங்கசாமி தீக்ஷிதர் அவர்கள், ப்ரம்ம ஸ்ரீமத் சி- நா- நடேசதீக்ஷிதர் அவர்கள், ப்ரம்ம ஸ்ரீமத் சி- தண்டபாணிதீக்ஷிதர் அவர்கள், ப்ரம்ம ஸ்ரீமத் சி- கோபாலசாமிதீக்ஷிதர் அவர்கள், ப்ரம்ம ஸ்ரீமத், சிவ- தங்கசாமிதீக்ஷிதர் அவர்கள், ப்ரம்ம ஸ்ரீமத் சி- ற- பொ- குப்புசாமி தீக்ஷிதர் அவர்கள் : முதலான தீக்ஷிதப்பெருமான்களால் விளம்பரமிடப்பட்டு அன்றுகாலை ஸ்ரீ சமயாசாரிய சுவாமிகளுக்கு மகாபிஷேக அலங்கார ஆராதனங்கள் செய்யப்பட்டு, அவர்களால் தேவாராதி திருமுறைகள் பன்னிரண்டினையும் அலங்கரித்துப் பூசித்து: கோயில் அரசுவாவாகிய யானைபணிந்து சுவல் கொடுக்க, அதன்மீது எழுந்தருளப்பண்ணி, கொடி, குடை, சாமரம், முதலிய சர்வோபசாரங்களுடன் புறப்பட்டு, இருமொழித்திருவருட்பாக்கோஷந் திசைகடோறும் செவிடுபட மாடவீதித் திருவுலாவந்து, இராச சபையாகிய ஆயிரக்கான்மண்டபத்திலே திருமுறைகளை வீற்றிருக்கச்செய்தனர். அதன்பின் ஸ்ரீமத் நா- கதிரைவேற்பிள்ளை அவர்களைக்கொண்டு பன்னிரு திருமுறைத் திருவருட்பாமகிமை, கருங்குழி இராமலிங்கபிள்ளை செய்த சிதம்பரதூஷணம், சிவநங்கையில் விழுந்தகாலை உடம்

புந்துகிறு நனையாமல் நடராசப்பெருமானெடுத்துப் பொற்பூணை ணிந்தார் என்று இராமலிங்கபிள்ளையுரைத்தபொய், அவர்பாடல் திருவருட்பா, திருமுறை ஆகாதென்பது என்னுமிவ்விஷயங்கள் சுமார் ( 8000 ) எண்ணாயிரம் சிவநேயர்செல்வர்கள் மத்தியில் பலப்பல பிரமாண நியாயங்களுடன் கேட்டோர் யாவரும் ஆனந் தவாரிதியின் முழுகுமாறு பிரசங்கஞ் செய்விக்கப்பட்டது. உடனே நீக்ஷித சுவாமிகள் யாவரும் ஏனைய சிவநேயச் செல்வர்களும் உபந்நியாசகர் கூறியவெல்லாம் சத்தியம், சத்தி யம், முக்காலுஞ்சத்தியமே என்று ஆனந்த முற்று பூமாலையிட் டுப் பட்டுப்பரிவட்டந்தரித்துச் சன்மானமளித்து ஆசிகூறினர். அதன்பின் ஸ்ரீநடராசப்பெருமானுக்கு அன்னப்பாவாடையாரா தனம் நடத்தப்பட்டது. இதுசெய்தோர் ப்ரம்ம ஸ்ரீமத் தில்லை வாழந்தணர் பெருமான்களும், மகாவித்வான், ஸ்ரீமத் சி- சுவா மிநாதபண்டிதர் அவர்களும், சிதம்பரம் அறுபத்துமூவர் குரு பூசைமடம் ஸ்ரீமத், செல்லப்பதேசிகர்அவர்களும், சண்முகசுந்தர விலாஸ அச்சியந்திரசாலைத்தலைவர் விருத்தாசலம் ஸ்ரீமந் வி- சதாசிவம் பிள்ளை அவர்களும், சிதம்பரம் தேவாரபாடசாலை உபாத்தியாயர், ஸ்ரீமந் நடராசஓதுவாமூர்த்திகள் அவர்களுமாவர்.

ஐந்தாவது மகோற்சவம்.

தேவ கோட்டையிலே ஸ்ரீமீனுக்ஷி சுந்தரப்பெருமான் ஆலயத்திலே ( 30—12—04 ) வெள்ளிக்கிழமை அபிஷேக ஆராதனங்களும் பன்னிருதிருமுறை மகோற்சவமும் கொண்டாடப் பட்டன. இரவு ஸ்ரீமந் நா- கதிரைவேற்பிள்ளை அவர்களால் திருவருட்பாமகிமையும், கருங்குழியார்பாடல்களின் மறுப்பும் உபந்நியாசிக்கப்பட்டன. உபந்நியாஸமுடிவில் மாயாவாததும் சகோளரியாம் அவர்க்கு மாலையிட்டு பட்டுப்பரிவட்டமுதலிய சன்மானங்கள் செய்தார்கள். அவ்வுபந்நியாச மகோற்சவங்க யநுவதித்து மகாவித்துவான் ஸ்ரீமத் சி- சுவாமிநாத அவர்கள் வியந்து பேசியபின், தஞ்சை வித்வான்- பிள்ளை அவர்கள், உடுமலைப்பேட்டைக் கல்விச்ச ரி . . . ரபகவி- முத்துசாமி செட்டியார்

மதுரை வித்வான்- பாஷ்யம் இராமநுஜ தாசர் அவர்கள், வல்வைநகர்- கணபதிப்புலவர் அவர்கள், முதலாயினோர் பாமாலை சூட்டியதன்றி, இராமலிங்கபிள்ளை பாடலைக்கண்டித்தும் பேசினார், இது செய்தோர் தேவகோட்டை மேனுவலை ஸ்ரீமந், அரு, அரு- ராம, சோமசுந்தரச்செட்டியாரவர்கள்.

ஆறுவது சுசாரூடமகோற்சவம்.

ஸ்ரீகாஞ்சிபுரத்திலேஸ்ரீஏகாம்பரேச்சுரபெருமானார்ஆலயத்திலே நாளது ஜனவரி 22௳ ஆகிய குரோதிவருடம் தை 10௳ ஞாயிற்றுக்கிழமை ஸ்ரீசமயாசாரியருக்கும், சேக்கிழார் பெருமானுக்கும் மகாபிஷேக அலங்கார ஆராதனங்கள் செய்து தேவாரமுதலிய பன்னிருதிருமுறைத் திருவருட்பாக்களையும், கொயில் இராசகசமீது மகாலங்கார சர்வோபசாரங்களுடன் எழுந்தருளுவித்து, அந்தணர்கள், ஓதுவார்மூர்த்திகள், திருக்கூட்டத்தார் பலப்பல சபையோர்கள் புடைசூழ வேதகோஷங்கள் விம்ம, வாத்தியங்கள், அதர்வேட்டுகள், பாணங்களின் ஒலிகளாற்றிசைகள் செவிடுபட, இராசவீதித் திருவுலாவந்து ஆயிரக்கால் மண்டபத்திலே வீற்றிருக்கச்செய்து ஸ்ரீமத்- கதிரைவேற்பிள்ளை அவர்களால்திருவருட்பாபிரபாவஉபந்நியாசம் நடத்தப்பட்டது. உபந்நியாசமுடிவிலே இராமலிங்கபிள்ளை பாடலாபாசதர்ப்பணவிசயமகாசரபம், ஸ்ரீபரமாசாரிய சுவாமிகள் கட்டியங்கள், காஞ்சித்திருமுறைமகோற்சவநாமாவளி, அருட்பா வெற்றிக்கையுறைவாழ்த்து, திருவருட்பா மகோற்சவவிபவம் என்னும் இப்புத்தகங்களை சிவனடியார்களுக்கு விநியோகிக்கப்பட்டன. உபந்நியாசமுடிவில் இவ்வழக்கு வெற்றிச்சின்னமாக மாயாவாததும்சகோளரி ஸ்ரீமந், நா, கதிரைவேற்பிள்ளை அவர்களுக்கு ஸ்ரீகாஞ்சிச்சித்தாந்தசிவநேசத்திருக்கூட்டத்தினரால் திருமுறைகயிற்றுச்செய்து அரதனம்பதித்த கௌரிசங்கர உருத்ராக்ஷ- கதிரைவேரன்மானஞ்செய்யப்பட்டது.

முறைத் திருவருள்
செய்த சிதம்பரது



முற்றிற்று.